இந்த தொழிலில் ஈடுபட்டிருக்கிறவர்களுக்கும் மற்ற வசதியுள்ளவர்களுக்கும் இன்னும் பெரிய முதலாளிகளுக்கும் இதன் மூலம் அதிக பர்மிட்டுகள் கிடைக்க வசதிகள் இருக்கின்றன என்பதை கனம் மந்திரி அவர்கள் அறிவாரா ?

THE HON. SRI V. RAMAIAH : நான் முதலிலேயே சொல்லியிருக்கிறேன். புதியதாக வரக்கூடியவர்கள் வராவதற்கு சந்தர்ப்பம் இல்லாத சூழ்நிலையை திருத்தி அமைக்கப்பட்டிருக்கிறது என்று. புதியதாக வருகிறவர்களுக்கு சந்தர்ப்பம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

SRI V. K. KOTHANDARAMAN : புதியதாக கொடுக்கக்கூடாது, பஸ் ரூட்டுகள் கொடுக்கப்படுகிற சந்தர்ப்பங்களில் கொடுக்கப்படுகிறது என்று சொல்லக்கூடிய நேரத்தில் கனம் மந்திரி அவர்கள் சொல்லியபோது ஜி. ஓ.வில் கண்டபடி ஒன்று முதல் பதினைந்து வரையிலும் புதியதாக வரக்கூடியவர்களுக்குக் கொடுக்கவேண்டும் என்றும், பதினொன்று முதல் இருபத்தைந்து வரையில் ஒன்று முதல் நான்கு பஸ்கள் வைத்துக்கொண்டிருக்கிறவர்களுக்குக் கொடுக்கவேண்டும் என்றும், இருபத்தைந்து முதற்கொண்டு முப்பத்தைந்து வரையில் . . .

MR. SPEAKER : இதற்கெல்லாம் பதில் சொல்ல முடியாது. எப்படி பதில் சொல்ல முடியும்?

SRI V. K. KOTHANDARAMAN : சாதாரணமாக இருக்கிற சூழ்நிலையின் காரணத்தால் மற்றவர்களுக்கும் கிடைக்கக்கூடிய அளவில் ஏதாவது முயற்சியை கனம் மந்திரி அவர்கள் எடுத்துக்கொள்ளுவார்களா?

THE HON. SRI V. RAMAIAH : தனியாக கேள்வி கேளுங்கள், பதில் சொல்லுகிறேன்.

*Pudukkottai Alangudy Road*

* 428 *Q.*—SRI V. ARUNACHALA THEVAR : Will the Hon. the Minister for Local Administration be pleased to state whether the Pudukkottai-Alangudy via Maippallam road will be metalled this year?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : No, Sir.

*Bridge over the Pamini river*

*429 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) திருத்துறைப்பூண்டி, பட்டுக்கோட்டை மார்கத்திலுள்ள பாமணி ஆற்றில் பாலம் பழுதடைந்து எவ்வளவு காலமாகிறது?

(ஆ) இதைப் புதுப்பிக்க அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறது?

(இ) எப்போது இந்த வேலை பூர்த்தியடையும் ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Since the cyclone of 1955.

(*b*) The reconstruction of the bridge at a cost of Rs. 4·5 lakhs has been approved by the Government.

(*c*) The work is expected to be completed by May 1960.